Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 45 காசு

பண்பு

எளிமைதான் நமது பண்பு. அது மட்டுமல்ல, நிலை உயர உயர மிக எளிமையாயிருப்பது தான் அந்தப் பண்பின் சிகரமாகும்.




# அண்ணா




இழப்பு

எவன் தன்மானத்தையும் பகுத்தறியும் சக்தியையும் இழந்து விடுகிறானோ அவன் எல்லாவற்றையுமே இழந்துவிட்டவனாகிறான்.






மலர்: 7 சென்னை 8-2-83 செவ்வாய் வெளியீடு 9-2-83 புதன் இதழ்: 111

## தமிழகத்துக்கு அரிசி தராத மத்ய அரசுபோக்கைகண்டித்து

# புரட்சித்தலைவர் உண்ணாவிரதம்

## ஐந்து கோடி தமிழர்களின் நலனுக்காக புரட்சிதலைவரின் அடையாள அறப்போர்

சென்னை, பிப் 8- தமிழக மக்களுக்கு அரிசி கொடுக்காத மத்திய அரசின் ஒருமைப்பாட்டுக்கு விரோதமான போக்கைக் கண்டித்து முதலவர் புரட்சித்தலைவர் நாளை உண்ணாவிரதமிருக்கிறார்.

ஐந்து கோடித் தமிழர்களின் நலனுக்கான இந்த அடையாள அறப்போரை நாளை காலை 10 மணிக்கு அண்ணா சதுக்கத்தில் புரட்சித்தலைவர் நடத்துகிறார்.

கவர்னர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீது நடந்த விவாதத்துக்குப் பதிலளித்து முதல்வர் புரட்சித் தலைவர் மேலவையில் கூறியதாவது:—

வறட்சி பற்றி இங்கே பேசியபோது ஒன்றைக் குறிப்பிட்டார்கள். எவ்வெப்போது சொல்ல வேண்டுமோ அவ்வப்போது சொன்னோமா என்று கேட்டார்கள்.

அக்டோபர், நவம்பர் டிசம்பர் மாதத்தில் வடகிழக்குப் பருவக் காற்று வீசும்.

அதைத் தொடர்ந்து மழை வருமா, வராதா என்பதெல்லாம் டிசம்பர் இறுதி வரை எதிர்பார்க்க வேண்டி இருக்கிறது.

இதை நாங்கள் மட்டுமல்ல பல அரசுகள் இதைப்போல் எதிர்பார்த்து கடமையாற்ற முன் வந்திருக்கிறது.

தி.மு.க. அரசு ஜனவரி 24-ந் தேதி கூட வறட்சி பற்றி அறிக்கையை அனுப்பி இருக்கிறது.

தொடர்ந்து வறட்சியும் இருந்து இருக்கிறது. 31-12-82ல் அறிக்கை அனுப்பி இருந்தால் 20-1-83 க்குள் வறட்சி 10 மடங்காகப் பெருகி இருக்கிறது என்று எதிர்க்கட்சித் தலைவர் கூறினார்.

அதற்கு முன்னால் அறிக்கையை அனுப்பியிருந்தால் இதே அவையில் என்ன அவசரம் அறிக்கை அனுப்பிவிட்டீர்கள் என்று கேட்பீர்கள்.

13ம் தேதி டெலக்ஸ் மூலம் செய்தி அனுப்பினோம் 21-ம் தேதி அறிக்கையை அனுப்புகிறோம் என்று தலைமைச் செயலாளர் உடல் நலம் இல்லாமல் இருந்ததால் நாங்கள் அதன் பிறகு அனுப்பி வைத்தோம்.

இப்போது வறட்சி நிலைமை வேறாக இருக்கிறது.

குழு வந்து பார்க்கும் போது எவ்வளவு கேட்க வேண்டும் இருக்

கிறது என்பதைத் திட்டமிட்டு சொல்ல இயலவில்லை.

காவிரியைப் பற்றிப் பேசும் போது ஒருங்கிணைந்த ஒருமைப்பாடுள்ள ஒன்றுபட்ட இந்தியத் துணைக் கண்டத்தில் தமிழகமும் இருக்கிறது என்ற நிலையை உணர வேண்டும்.

கலைஞர் கருணாநிதி காவிரிப் பிரச்னையில் நம்பினார், பேசினார்கள் அவர்கள் 1924-ம் ஆண்டு ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்வதற்கில்லை என்று சொல்லி விட்டார்கள்.

நாம் 24-ம் ஆண்டு ஒப்பந்தத்தைவிட்டுக்கொடுப்பதாக இல்லை.

அப்போதுதான் எப்படி இவ்வளவு உற்பத்தியைத் தொடங்கி இருக்கிறீர்கள் என்று கேட்கிறார்கள். நாம் தனியாக ஒதுக்கப்பட்டு இருக்கிறோமா?

நீங்கள் என்ன நடவடிக்கையை வறட்சிக்காக எடுத்தீர்கள் என்று கேட்கிறார்கள்.

எவ்வெப்போது மத்திய அமைச்சர்களை சந்திப்போமோ அப்போது எல்லாம் அரிசி நெருக்கடிகளைபற்றி குறிப்பிட்டே வந்தோம்.

உபரி நெல்லை நாம் எப்போதும் கொள்முதல் செய்து இருக்கிறோம்.

### உபரியானபோது மத்திய தொகுப்புக்கு அரிசி

மத்திய அரசு தொகுப்புக்கு வசதி உள்ள [illegible] அரிசி [illegible]த்துள்ளோம்.

ஆனால் மத்திய அரசு உண்மைக்குப் [illegible] மாறுபட்ட [illegible] சொல்லி [illegible]

[illegible] 7ல் இருந்து நாம் மத்திய தொகுப்புக்கு அரிசியைக் கொடுத்து இருக்கிறோம்.

71ல் 50 ஆயிரம் டன்கள் 72-73ல் ஒருலட்சத்து 11 ஆயிரம் டன் அரிசி 75-76ல் 2 லட்சத்து 93 ஆயிரம் டன் அரிசி. கொடுத்து இருக்கிறோம்.

78-79ல் 2 லட்சம் டன் அரிசியை வைத்துக் கொண்டு மத்திய அரசுக்கு கடிதம் எழுதினோம்,

இந்திய உணவு கழகத்திற்கும் செய்தி அனுப்பினோம்.

மத்திய அரசும் உணவுக் கழகமும் உடனடி நடவடிக்கை எடுக்கவில்லை.

15-2-79ல் நாம் கடிதம் எழுதி இருக்கிறோம். 21-5-79 நாளிட்ட கடிதத்தில் இந்திய உணவுக் கழகத்தின் முதுநிலை பிராந்திய மேலாளர் கேட்டுக் கொண்டதற்கு இணங்க 24-5-79 அன்று அவரிடம் எந்த எந்த உணவுக்கிடங்குகளில் இருந்து இந்த 2 லட்சம் டன் அரிசியை இந்திய உணவுக் கழகம் எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற பட்டியல் ஒன்று நேரில் கொடுக்கப்பட்டது.

பின்னர் இது குறித்து 20-6-79 அன்று அவருக்கு ஒருகடிதம் எழுதப்பட்டது

ஆனால் மைய அரசின் இந்திய உணவுக் கழகம் இதன் மீது எந்த நடவடிக்கையும் எடுக்காமல் காலம் தாழ்த்தியது.

இந்த அரிசியை விரைவில் எடுத்துக் கொள்ளுமாறு மைய அரசுக்கு 25-5-79 அன்று கடிதம் எழுதப்பட்டது.

அந்தக் கடிதத்தில் 31-3-79ல் இருந்து 6 மாத காலம் முடிந்து விட்டபடியால் விரைவில் அரிசியை எடுத்துக் கொள்ளுமாறு இந்திய உணவுக்கழகத்திற்கு அறிவுறுத்துமாறு மத்திய அரசை கேட்டுக் கொண்டது.

அதைத் தொடர்ந்து 10-7-79, 8-8-79, 29-8-79 ஆகிய தேதிகளில் அனுப்பப்பட்ட தந்திகள் மூலம் மத்திய தொகுப்புக்கு மாநில அரசு ஒதுக்கி வைத்திருக்கும் அரிசியை விரைவில்

2-ம பக்கம் பார்க்க

### ரகுமான்கான் உரிமைப்-பிரச்னை தள்ளுபடி

சட்டசபையில் இன்று அத்தியாவசியப் பணிகள் பராமரிப்பு அவசரசட்டம் குறித்து ரகுமான்கானால் கொண்டு வரப்பட்ட அவை உரிமை மீறல்பிரச்சினைக்கு சபாநாயகர் ராசாராம் அனுமதி மறுத்தார்

★

### உண்ணாவிரதம் பற்றி முதல்வர் புரட்சித்தலைவர் பேட்டி

சென்னை. பிப். 8- முதல்வர் புரட்சித் தலைவரது உண்ணாவிரதத் திட்டம் குறித்து நிருபர்கள் புரட்சித் தலைவரிடம் கேட்ட போது முதல்வர் நிருபர்களிடம் கூறியதாவது:-

என்னை - நானே வருத்திக் கொள்கிறேன். இந்த உண்ணாவிரதத்தில் மற்ற அமைச்சர்களோ கழகத்தவரோ கலந்து கொள்ள அனுமதிக்கப் படமாட்டார்கள். நான் மட்டுமே உண்ணாவிரதம் இருப்பேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

★ சத்துணவுத்திட்டம் மிக உயர்ந்த திட்டம்

★ இந்தத் திட்டத்தைத் தந்த முதல்வரை பாராட்டுகிறேன்

## சத்துணவுத்திட்ட பெருமை அனைத்தும் முதல்வரையே சேரும்

### தி. மு. க. எம். எல், சி பாராட்டு

சென்னை, பிப். 8- சத்துணவுத் திட்டம் மிக உயர்ந்த திட்டம். இந்தத் திட்டத்தை அளித்த முதலமைச்சரைப் பாராட்டுகிறேன். சத்துணவுத்திட்டத்தின் பெருமை அனைத்தும் முதலமைச்சரையே சாரும் என்று மேலவையில் எதிர்க்கட்சித் தலைவர் (தி.மு.க.) சங்கரலிங்கம் கூறினார்,

தமிழக சட்ட மன்ற மேலவையில் ஆளுநர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீது பேசுகையில் எதிர்க்கட்சித் தலைவர் சங்கரலிங்கம் (தி.மு.க) கூறியதாவது:-

முதல் அமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டம் மிக உயர்ந்த திட்டம். இதில் கருத்து வேறுபாடு என்ற பேச்சிற்கே இடமில்லை. இதில் ஆங்காங்கே உள்ள குறைபாடுகளை நீக்க வேண்டும். சத்துணவுத் திட்ட பொறுப்பிலிருந்து ஆசிரியர்களை நீக்கியதற்கு நான் உளமாரப் பாராட்டுகிறேன். இந்த திட்டம் வெற்றி பெற உதவுவோம். இத்தகைய சிறந்த திட்டத்தைக் கொடுத்த நமது முதலமைச்சரைபாராட்டுகிறேன். சத்துணவுதிட்ட பெருமையெல்லாம் முதலமைச்சரையேசாரும் இரண்டு வேளை உணவு கூட அவர்களுக்கு தரலாம்.

அமைச்சர் திருநாவுக்கரசு:— பாண்டிச்சேரியில் இதனைச் செயல்படுத்துவதுதானே?

சங்கரலிங்கம்:— அவர்களும் கொடுக்க வேண்டியதுதான். தப்பை தப்பு இல்லை என்று நான் கூற மாட்டேன். மொழி கொள்கை குறித்து ஆளுநர் உரையில் திட்டவட்டமாக குறிப்பிட்டிருப்பதற்கு எனது பாராட்டுகளை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு சங்கரலிங்கம் பேசினார்.

### நீதிபதிகள் பற்றிய பேச்சு: முதல்வர் கருத்து

2-ம் பக்கம்

★ தொழில் துவங்க அனுமதி கேட்டால் தருவதில்லை-ஆனால் தொழில் வளர்ச்சியில் பின் தங்கி விட்டதாக கூறுகிறார்கள்

★ பின்தங்கிய தொழில் தாலுக்காக்களை அறிவிக்க சொன்னால் தமிழகம் முன்னேறி இருக்கிறது என்கிறார்கள்.

★ உணவு உற்பத்தியைப் பெருக்க சொல்கிறார்கள்-ஆனால் தண்ணீர் திறந்துவிட நடவடிக்கைஇல்லை

# மத்ய அரசு விதண்டாவாதம்

### முதல்வர் புரட்சித்தலைவர் கடும் கண்டனம்

சென்னை, பிப் 8- தமிழகம் சம்பந்தப்பட்ட பல்வேறு விஷயங்களில் மத்திய அரசு விதண்டாவாதம் செய்யும் விவரத்தை முதல்வர் புரட்சித்தலைவர் எடுத்துக் கூறினார்.

சட்ட மன்ற மேலவையில் ஆளுநர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்திற்கு பதிலளித்துப் பேசுகையில் முதல்வர் புரட்சித்தலைவர் கூறியதாவது:—

ஆளுநர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீது இங்கு 31 உறுப்பினர்கள் தங்கள் கருத்துகளைத் தெரிவித்திருக்கிறார்கள். 919 நிமிடங்கள் அவர்கள் பல்வேறு வகைப்பட்ட கருத்துக்களை தெரிவித்து இருக்கிறார்கள்.

ஆனால் நானோ 60 நிமிடங்களில் பதிலளிக்க வேண்டிய சூழ்நிலையில் உள்ளேன். பல்வேறு பிரச்சினைகளுக்கும் பல்வேறு கருத்துகளுக்கும் விரிவாக பதில் கூற இயலாத நிலை இதனால் ஏற்படுகிறது என்பதைக் கோடிட்டு காட்டவிரும்புகிறேன்.

பொதுவாக இங்கு பேசியவர்கள் கண்ணியமாக நல்ல தமிழில் 'ஆங்கிலத்தில் தெளிவாக உள்நோக்கம் இன்றி தங்கள் கருத்துகளை வெளியிட்டார்கள் என் பதில் பெருமைப் படுகிறேன்.

உறுப்பினர் மாணிக்கம், உறுப்பினர் நல்லசிவம் ஆசிரியர் பிரதிநிதிகள் கட்சி சார்புள்ளவர்கள் ஆகிய அனைத்து உறுப்பினர்களும் இங்கு பேசும் போது நாட்டுக்கு தேவையான கருத்தையே பேசி உள்ளார்கள்.

குறிப்பாக தண்ணீர் பஞ்சம், உணவுப் பற்றாக்குறை சட்டம் ஒழுங்கு பிரச்சினை, தொழில் ஆகியவை பற்றியெல்லாம் குறிப்பிட்டார்கள்.

### நியாயம் கேட்கிறோம்

தொழில் துறையைப் பற்றிப் பேசும் போது தொழில் துறையில் அமைதி இருந்தால் வேலை வாய்ப்பு அதிகமாகும், தொழில்களைத் துவக்குவோரும் துணிவாக முன் வருவார்கள் என்றும் இங்கே விவாதித்தார்கள். நாங்கள் ஏறத்தாழ 115 தனி நபர்களுக்கு தொழில்கள் துவக்க பரிந்துரை செய்தோம்.

இதே போன்று அரசு நிறுவனங்கள் சார்பிலும், தொழில்கள் அமைக்க வாய்ப்புகள் கோரப்பட்டன.

ஆனால் பல மாதங்கள் ஆகிவிட்டன. எந்தவிதமான நியாயமான பதிலும் நமக்கு (மத்திய அரசிடமிருந்து) கிடைக்கவில்லை. இங்கே மத்திய பாதுகாப்புத் துறை அமைச்சர் ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பேசினார். அதே மேடையில் நானும் பேசினேன். சில கருத்துக்களை அழுத்தமாகக் கூற விரும்புகிறேன்.

### பொதுக் கொள்கை

மேடு, பள்ளங்களை சமப்படுத்துகின்ற சேவை பொருளாதார, சமூக அமைப்பில் சரியானதாகும்.

இது ஒரு பொதுக் கொள்கையும் ஆகும். இந்தக் கொள்கையை நிச்சயமாக வரவேற்று ஒத்துழைப்பு தரத் தயாராக உள்ளோம்.

ஆனால் மாவட்டங்கள் என்ற வகையில் பிற்படுத்தப்பட்ட என்றோ, அல்லது பின் தங்கி என்றோ ஒரு பெயரை முன்னே சேர்த்து மைய அரசு வெளியிடுகிறது. நான் கேட்டேன்- தமிழகத்தில் அவ்வாறுஏன் ஒரு மாவட்டத்தைக் கூட குறிப்பிடவில்லை என்று நான் கேட்டேன். அதற்கு அவர்கள் தமிழ்நாட்டில் உள்ள எல்லா மாவட்டங்களில் ஏதாவது ஒரு தொழிற்சாலை இருக்கிறது என்கிறார்கள்,

### விதண்டா வாதம்

தமிழகம் முன்னேறி விட்டதாகவும் கூறுகிறார்கள். தற்போதைய பாதுகாப்புத் துறை அமைச்சர் தொழில்துறையில் தமிழகம் இரண்டாவது இடத்திலிருந்து 9-வது இடத்திற்கு போய் விட்டது என்றார். அங்கே போய் நாம் பேசும்போது நீங்கள் முன்னேறி விட்டீர்கள் என்றார்கள். தாலுக்கா வாரியாக தொழில் துறையில் பிற்படுத்தப்பட்ட தாலுக்கா என அறிவியுங்கள் என்றால் அதற்கு நிதிநிலை இடம் தரவில்லை என்கிறார்கள்.

இது விதண்டா வாதமா, நியாயமான வாதமா என்பதை இங்கு இருக்கின்ற உறுப்பினர்கள் தங்களுக்குள் கேள்வி எழுப்பி ஆராய்ந்து பார்த்து மக்கள் முன் பதிலை வைக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

### முரண்பாடு பாரீர்

கோடிக் கணக்கான பேர்களுக்கு கிராமப்புறங்களில் வேலை வாய்ப்பினை ஏற்படுத்தித் தர விரும்புகிறோம். கூட்டுறவுத்துறை, பொதுத் துறை, தனியார் துறை என்றெல்லாம் பிரித்துப் பார்க்காமல் தனியார் துறைக்கும் ஒத்துழைப்பு தந்து வருகிறோம. குறிப்பிட்ட சில மாநிலங்களில் வசதிகளையும், வாய்ப்பு

(2-ம பக்கம் பார்க்க)

40-வது வட்ட

## இ. காங்கிரஸ் செயலாளர் கழகத்தில் சேர்ந்தார்

சென்னை, பிப், 8— 40-வது வட்ட இ.காங்கிரஸ் செயலாளர் என். சந்திரனும் மற்றும் 50 பேர்களும் இ. காங்கிரசிலிருந்து விலகி மாவட்டச்செயலாளர் ஜேப்பியார் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

அப்போது ஜி. சுகுமாரன் து. சந்திரன் மு. கன்னியப்பன். ஆகியோர் உடனிருந்தனர்.

★ நீதிமன்றத்தின்மீது எங்களைவிட நம்பிக்கை வைத்திருப்பவர்கள் யாருமில்லை

★ நீதியில் குறுக்கிடாத ஒரே அரசு கழக அரசு

# நீதிபதிகள் பற்றி நான் கூறியது பிரதமர் இந்திரா கூறிய கருத்தே

புரட்சித்தலைவர் விளக்கம்

## அந்தக் கருத்தை கூற எனக்கு உரிமையுண்டு

**சென்னை, பிப். 8- நீதிபதிகள் பற்றி நான் கூறிய கருத்து பிரதமர் இந்திரா கூறிய கருத்தை ஒட்டியது தான். அந்தக் கருத்தைக் கூற எனக்கு உரிமையுண்டு என்று முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

சட்ட மேலவையில் ஆளுனர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்திற்கு பதிலளித்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:-

குழந்தைகள் அதிகமாகப் பள்ளிக்கு வர வேண்டும் அவர்களுக்கு கல்விகற்றுத்தரவேண்டும் என்ற எண்ணத்தில் சரியோ தவறோ நாங்கள் சத்துணவு திட்டத்தை நடத்த முன்வந்தோம். எதிர்க்கட்சி தலைவர் சங்கரலிங்கம் பாராட்டுவது போல கூறினார்.

மதுக்கடைகளை நீங்கள் திறந்து விட்டதால் 2 வேளை உணவுபோட வேண்டும். இரண்டு வேளையாவது போட வேண்டும் என்றார்.

"இரண்டு, மூன்று ஆண்டுகளாக ஒவ்வொரு ஆண்டும் ஒரு லட்சம் குழந்தைகள் வருகிறார்கள் என்றீர்கள் இப்போதும் ஒரு லட்சம் குழந்தைகள் வந்துவிடும்" என்றார்.

புதிதாகதோற்றுவிக்கப்பட்ட ஒரு கட்சியின் தலைவர் (நாயுடு) பகிரங்கமாக ஓரிடத்தில் பேசும்போது இனிமேல் சிறுவர்கள் வேலைக்கு கிடைக்கமாட்டார்கள் என்று கூறி இருக்கிறார்.

வேலைக்குப் போய்க் கொண்டிருந்த சிறுவர்கள் சாப்பாடு கிடைப்பதால் படிக்க வந்து விடுகிறார்கள் அதோடு 2 வயதில் இருந்து 5 வயதுக்குள் உள்ள குழந்தைகள் வளர்ந்து கொண்டு இருப்பதால் அவர்கள் பள்ளிக்கு வரும் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது.

இன்றைக்கு 2 லட்சத்து 60 ஆயிரம் குழந்தைகள் பள்ளிகளில் புதிதாகச் சேர்ந்து இருக்கிறார்கள்.

ஆசிரியர்கள் முன்பு நெருக்கடியில் இருந்தார்கள்.

இத்தனை குழந்தைகள் ஒரு ஆசிரியருக்கு இருந்தால் தான் வேலை. இல்லாவிட்டால் வேலை இல்லை என்ற வகையில் வேலைக்கு ஆபத்து என்று இருந்தது. இன்று அது போல் இல்லை.

### 1.75 லட்சம் பேருக்கு வேலை

ஆசிரியர்கள் அரிசி, பருப்பு வாங்கி பணம் திரட்டி சமைத்துப் போட்டுக் கொண்டு இருந்தார்கள். இன்றைக்கு அந்தவேலை இல்லை. ஒருலட்சத்து 75 ஆயிரம் பேர்களுக்கு வேலைவாய்ப்புகொடுத்து ஆசிரியர்களின் பளுவைக் குறைத்து இருக்கிறோம்.

இந்த திட்டத்தின் மூல கர்த்தா நான் என்றோ ஆதிகர்த்தா நான் என்றோ சொல்லிக் கொள்ளத் தயாராக இல்லை.

இந்தப் பணியைச் செய்ய வாய்ப்பை எடுத்துக் கொண்டேன்.

மக்களின் நம்பிக்கை பெற்று இருக்கிற தனி மனிதன் என்ற வகையில் முதலமைச்சராக இல்லாமல் இந்தக் கருத்தைச் சொல்கிறேன்.

### மக்கள் நமபிக்கை

மக்களுக்கு நான் செய்ததைவிட மக்கள் என் மீது வைத்திருக்கும் நம்பிக்கை அதிகம்.

அரசியல் ஒரு தொழில் என்று சிலர் கூறி இருக்கிறார்கள்.

ஒரு பெரிய தலைவர் பேசும்போது எம். ஜி. ஆருக்கு இதை விட்டால் வேறு வேலை இருக்கிறது அதை அவர் செய்யலாம் நாவலருக்கும் எனக்கும் அரசியலை விட்டால் வேறு தொழில் இல்லை என்று அவர் கூறி இருக்கிறார்.

அரசியல்தியாகமேதவிர லாப— நட்டம் பார்க்கும் தொழில் அல்ல.

நான் ஒரு கட்சியில் இருக்கும் போது இரண்டு பேருக்கு ஒரே அளவு வித்தியாசம் இன்றி பணம் கொடுத்தேன்.

அதில் ஒருவர் வந்தார். என்மேல் உங்களுக்கு என்ன கோபம் என்று கேட்டார்.

நான் என்ன விஷயம் என்றுகேட்டேன். அடுத்தவரைச்சொல்லிஅவருக்குப் பணம் கொடுத்தீர்களா என்று கேட்டார்.

### வழிகாட்டி கலைவாணரே

ஆமாம் அதே அளவு தான் கொடுத்தேன் என்றேன். அவர் நீங்கள் தனக்குத் தந்ததை வட்டிக்கு தந்து விட்டார் என்றுகூறினார். அவருக்கு வேண்டுமானால் அரசியல் தொழிலாக இருக்கலாம். நான் அரசியலுக்கு வரக் காரணம் கலைவாணர் என். எஸ். கே. தான்.

நான் காங்கிரஸ்காரனாக இருந்தபோது அவர் அரசியலுக்கு வருவதற்கு குடியரசு பத்திரிகையைப் படி என்றார்.

நான் எப்போதும் மதிக்கிற ஜீவாவை எனக்கு அறிமுகப்படுத்தினார். நான் திரைப்படங்களில் நடிக்கும்போது, வாய்ப்புகிடைக்கும் போதெல்லாம் அண்ணாவின் கொள்கைகளைச் சொல்லி வந்தேன்.

மக்கள் என்னை நம்பி முதலமைச்சராக ஆக்கி இருக்கிறார்கள்.

நான் அரசியலுக்கு வந்தது, எவை எவைகளைத் தீர்க்க வேண்டும் என்று வேதனைப்பட்டேனோ அவைகளைத் தீர்ப்பதற்குத் தான்.

அண்ணாவின் 'பணத் தோட்டம்' புத்தகத்தைப் படித்த பிறகுதான் நான் தி.மு.க.வுக்குவந்தேன்.

தனியாருக்குத் தொழில் அமைக்க வாய்ப்புக் கொடுக்கும்போது பொதுத்துறையில் அரசே தொழில்களை நடத்த வேண்டும். என்பதையெல்லாம் விட்டு விட்டு அனுமதி தருகிறோம்.

தனியார் வந்தாலும் பரவாயில்லை, என்று சொல்வதற்குக் காரணம் மூன்று நான்கு ஆண்டு கால அனுபவத்தில் அரசு மட்டும் எல்லோருக்கும் வேலை தந்துவிட முடியும் என்பதை ஒத்துக் கொள்ள முடியவில்லை.

அதனால்தான் தனியாருக்கு வாய்ப்பு கொடுத்து இருக்கிறோம்.

### தொழில் அமைதி

சட்டம் ஒழுங்குப் பிரச்சினை வந்தால் தனியார் தொழிலையும்காப்பாற்றி அங்குள்ள தொழிலாளர் நலனையும் காப்பாற்றி தொழிலாளர் உழைத்தும் பயனில்லை என்ற நிலை ஏற்பட்டால் மாற்றியாக வேண்டும்.

ஆவடியில் நான்எடுத்த நிலையில் சிலருக்குக் கோபம் ஏற்பட்டாலும் இன்று அங்கு தொழிலும் பாதுகாக்கப்பட்டுள்ளது. தொழிலாளர்களும் அமைதியாக வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள்.

நாட்டின் பாதுகாப்புக்குத் தேவையான கருவிகள் அங்கே தயாரிக்கப்பட்டு வருகின்றன.

இந்த அமைதி சூழ்நிலையில்தான், மற்ற வகையில் அல்ல என்று தொழிற்சங்கத் தலைவர்கள் கருதினால் அவர்கள் காலம் கனியும் வரை காத்திருக்க வேண்டும்.

சுதந்திரம் என்னும் போது தனிமனிதர் சுதந்திரத்தையும் பார்க்க வேண்டும்.

### பொது நலன்

தனிமனிதல சுதந்திரம் பல மனிதர்களுடைய வாழ்க்கைக்கு பாதகமாக அமைந்து விடக்கூடாது.

மைனாரிட்டி மெஜாரிட்டி பார்க்காமல் நாட்டின் ஒட்டுமொத்த நலனையும் பார்த்துக் கொள்ள வேண்டி இருக்கிறது.

இங்கே சிமெண்ட் பற்றியெல்லாம் பேசினார்கள்.

ஒரு பக்கம் லெவி சிமெண்டை வாங்கி மறுபக்கம் தனியார்கள் அதிக விலைக்கு விற்பது பற்றிக் குறிப்பிட்டார்கள்.

பொது மக்களுக்கு விற்கும் உரிமை யாருக்கும் இருக்கக் கூடாது என்பது தான் என்னுடைய தீவிரமான எண்ணமாகும்.

லெவியில் வாங்கிக் கொண்டு கம்பெனியில் நஷ்டம் ஏற்படுகிறது என்று வெளியே அதிக விலைக்கு விற்பது ஏற்றுக் கொள்ள முடியாதது ஆகும்.

### அநியாய விலை கோருவோருக்கு கடும்தண்டனை

அதை நாம் மாற்றி அமைத்தாக வேண்டும்.

முழுவதையும் அரசே நியாய விலையில் விற்க வேண்டும் அல்லது அதிக விலைக்கு விற்றால் தனியாருக்கு கடுமையான தண்டனை தரவேண்டும்.

நமது நாட்டில் எதை எடுத்தாலும் அரசியலாக்கிவிடுகிறார்கள்.

திடீரென நாளைக்கு கூட்டம் நடக்கும். வியாபாரிகள் சங்கத்தார் எங்கள் உரிமை பறி போய்விட்டது என்று கோர்ட்டுக்குப போய் ஸ்டே வாங்கி விடுவார்கள்.

அங்கே மனச்சாட்சி பேசவில்லை, சட்டம் தான் பேசுகிறது.

எனக்கு சில சட்ட நிபுணர்கள் சொல்லியதை வைத்து சட்டசபையில் பேசினேன்.

அப்படிப் பேச எனக்கு உரிமை இருக்கிறது.

ஒருதிட்டத்தைத்திட்டும் போது அதனால் எத்தனை லட்சம் குடும்பங்கள் வாழும் என்பதைப் பார்க்க வேண்டும்.

அதையெல்லாம் பார்க்காமல் உடனே ஸ்டே தந்து விடுகிறார்கள்.

ஒரு கமிட்டி மாணவர்களைத் தேர்ந்து எடுக்கிறது.

இடம் கிடைக்காத மாணவர் கோர்ட்டுக்குப் போகிறார். அந்த மாணவருக்கு இடம் தர வேண்டும் என்று தீர்ப்புத் தரப்படுகிறது. அது நியாயம்.

நாம் இடம் தருவதோ, அல்லது மேல் கோர்ட்டுக்குப் போவதோ வேறு விஷயம்.

ஆனால் அந்தக் குழுவில் இருந்த நிபுணருக்குத் தண்டனை தரவேண்டும் என்றால் அடுத்த தேர்வுக்கு யாரை நாங்கள் நியமிப்பது?

அவர்களுக்கு என்ன உத்திரவாதம்?

பிரதமர் இரு தினங்களுக்கு முன்பு வெளியே பேசி இருக்கிறார். அவை கள் ஏடுகளில் வந்திருக்கின்றன.

"சட்டப்படி அல்லது விதிப்படி மட்டுமே நடப்போம் என்ற வரையறை காரணமாக சில சமயங்களில் நம்மால் நகரவே இயலவில்லை. கோர்ட்டுகளில் வழக்குகள் தேங்கி காலதாமதம் ஏற்படுவதால் நீதி தரும் அமைப்பின் மீதே ஏழைகளுக்கு நம்பிக்கை விட்டுபோகும். கோர்ட்டுகளை அரசியல் நோக்கங்களுக்காக பயன்படுத்தும் போக்கு கவலை தரும் அம்சம்" என்று கூறியுள்ளார்.

இதையே என்னுடைய கருத்தாகவும் எடுத்துக் கொள்ள வேண்டும்.

இந்தியாவின் தனித்தன்மை வாய்ந்த தலைவரே இந்தக் கருத்தைச் சொல்லி இருக்கிறார்.

முத்துசாமி குறுக்கிடு:- நிபுணர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று கூறினால் மீண்டும் யாரை குழுவில் போடுவது என்று முதலமைச்சர் கேட்டார், நிபுணர் தவறு செய்தால் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டாமா?

முதல்வர்: தேர்வாணைக்குழு போல உள்ள ஒரு குழுவில் உள்ளவர்கள் மீது நடவடிக்கை என் எடுக்கவேண்டும் என்றால் அவர்களுக்கு என்ன பாதுகாப்பு?

லஞ்சம் வாங்கியோ அல்லது ஜாதி உணர்வு அடிப்படையிலோ தேர்வு நடந்தது என்று நிருபிக்கப்பட்டால் நிச்சயம் தண்டனை உண்டு.

ஒரு மாணவருக்கு சீட்டு அளிக்கப்பட வேண்டும் என்று நீதிபதிகள் சொன்னதில் நாங்கள் குறுக்கிடவில்லை.

இதற்காக தேர்வு செய்தவர்களுக்கு தண்டனை அளிக்கப்பட வேண்டும் என்றால் மற்றவர்களுக்கு நாம ஏன் அங்கு போக வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டு விட்டதா?

அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும்என்று அரசிடம் கூறினால் எங்கள் நிலை என்ன?

நாங்கள் யாரை இந்தப்பணி செய்யுங்கள் என்று கேட்டுக் கொண்டோமோ அவர்களுக்கு நாங்களே தண்டனை அளிப்பது என்றால்என்ன ஆவது?

நீதிமன்றத்தின் மீது எங்களைவிட அதிகம் நம்பிக்கை வைத்திருப்பவர்கள் யாரும் இருக்க முடியாது.

முன்னாள் நீதிபதி இங்கே உறுப்பினராக உள்ள வெங்கடேசன் தீர்ப்பு வழங்குவதற்கு முன்பும், அதன் பின்பும் என்ன ஆனார் என்பது வரலாறு.

நாங்கள் அப்படி யாருடைய சலுகையைப் பெறுவதற்காகவும் இதைச் செய்யுங்கள் என்று கூறியதில்லை.

இதுபோல் நீதியில் குறுக்கிடாத அரசு இதற்கு முன்பு இருந்ததா?

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

### விதண்டா வாதம்

(1-ம் பக்க தொடர்ச்சி)

களையும் தருகிறார்கள்"

ஒட்டு மொத்தமாக நாம் மைய அரசைக் குற்றம் சொல்லுவதாக யாரும் கருதி விட வேண்டாம். ஆனால் இங்குள்ள நிலைமைகளை கூறத் தான் வேண்டும்.

வனத்துறையில் முன்பு ஏராளமான மரங்கள் அழிக்கப்பட்டன. இதனால் நிலச்சரிவுக்கு வழி ஏற்பட்டது. மழை பொய்த்தது.

இத்தகைய நிலை மீண்டும்நடக்க நான் விரும்பவில்லை. தோப்புகளில் சில தொழிலாளர்கள் குடிசை கட்டி வாழ்ந்து அதை ஆக்கிரமித்துக் கொண்டுள்ளனர். இதனால் அவர்களை வெளியேற்ற வேண்டிய கடமை ஏற்படுகிறது. இதனால் கெட்ட பெயர் வர வேண்டியவர்களாக நாங்கள் உள்ளோம். ஏனெனில் அவர்கள் மரங்களை வெட்டிவிடுவதாகக் கூறப்படுகிறது.

இதனால் அவர்களை அங்கிருந்து வெளியேற்ற வேண்டிய நிலைமை தோன்றுகிறது. இதனைச் செய்ய முடியாத சூழ்நிலையும் செய்ய வேண்டிய கட்டாயமும்; ஆகிய இரண்டு நிலைகள் ஏற்படுகின்றன.

### தண்ணீர் எங்கே?

சில பிரச்சினைகளுக்கு வரும் உத்திரவுகள் யோசனைகள், வேறுபடுகின்றன. சில ஆண்டுகளுக்குமுன் தி. மு. க. ஆட்சிக்காலத்தில் உணவு உற்பத்தி பெருக்கவேண்டும் என்ற யோசனை சொல்லப்பட்டது. இதனைத் தொடர்ந்து உணவு உற்பத்திப் பெருகப்பட்டது. தற்போதைய ஆட்சியிலும் அதைத் தொடர்ந்து செய்து வருகிறோம்.

அனைவரின் ஒத்துழைப்பாலும், உணவுத் துறையில் உபரி மாநிலம் என்ற நிலை ஏற்பட்டது. ஆனால் அப்பொழுது உற்பத்தி செய்ததையே இப்போது உற்பத்தி செய்கிறீர்களே என்கிறார்கள்.

ஆனால் தண்ணீரை திறந்து விடுங்கள் என்று கேட்டால் அதற்கு வேறுவிதமாகக் கூறுகிறார்கள். இது விதண்டா வாதமா இல்லையா என்பதை அனைவரும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

20 அம்ச திட்டத்தில் கூட இது பற்றி வருகிறது. ஆனால் அவர்கள் ஏப்படியும் கூறுகிறார்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

---

தலைமைக் கழக அறிக்கை

## நெய்வேலி நகர கழகத் தோழர்களுக்கு

9—2—83 மாலை 4 மணி அளவில் நெய்வேலி சர்க்யூட் அவுசில் நகர எல்லைக்கு உட்பட்ட கழக நிர்வாகிகள், தொழிற்சங்க, மன்ற, மாணவ மகளிர் பிரிவு பிரதிநிதிகள் அடங்கிய ஆலோசனைக் கூட்டம் நடைபெறும்.

அனைவரும் தவறாது கலந்துகொண்டு தங்களது மேலான கருத்துக்களைக் கழகவளர்ச்சிக்கு வழங்க வேண்டுகிறேன்.

என் ராஜாங்கம்
அமைப்புச் செயலாளர்

சென்னை—14
8—2—83

---

# புரட்சித்தலைவர் உண்ணாவிரதம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

எடுத்துக்கொள்ளுமாறு மத்திய அரசை மாநில அரசு கேட்டுக் கொண்டது.

12 மண்டலங்களில் உள்ள கிடங்குகளில் மத்திய தொகுப்புக்காக மாநில அரிசியை வைத்துள்ளது என்ற பட்டியல் 24-5-79 அன்றே இந்திய உணவுக் கழகத்தின் முதுநிலை பிராந்திய மேலாளரிடம் நேரில் கொடுக்கப்பட்டதோடு 29-6-79 அன்று கடிதம் மூலமாகவும் எழுதப்பட்டது.

2 மாதங்களுக்குள் நாம் ஒதுக்கி வைத்திருந்த 2 லட்சம் டன் அரிசியை அவர்கள் ஆய்வு செய்து முடித்து எடுத்துக் கொள்ளவேண்டி இருக்க 7 மாதங்களுக்குப்பின்னும் பெரும் பகுதியை ஆயவு செய்யாமல் ஒரு பகுதியை மட்டும் ஆய்வு செய்து அதிலும் 3 ஆயிரத்து 220 டன் அரிசியை மட்டும் எடுத்துக் கொண்டார்கள்.

மாநில அரசின் உணவுத்துறை அதிகாரிகள் வெவ்வேறு மட்டங்களிலுள்ள இந்திய உணவு கழகத்தின் அதிகாரிகளை அணுகியபோது எவ்வித பலனுமில்லை.

இந்த இடைப்பட்ட காலத்தில் இந்திய உணவு கழகத்திற்கு ஒதுக்கீடு செய்யப்பட்ட அரிசியைப் பாதுகாக்க வேண்டிய கட்டாயத்திற்கு மாநில அரசு தள்ளப்பட்டது.

இப்படி 9மாதங்களுக்கு அரிசி கிடங்கில் வைக்கவுபட்டதற்கான செலவு 4,54,54,000 என்றுகணக்கிடப்பட்டுள்ளது.

இந்திய உணவு கழகம் இந்த அரிசியை எடுத்துக் கொள்ள விருப்பமில்லை என்றுமுன்பே தெரிவித்திருந்தால் இந்தக் கையிருப்பை வெளிச் சந்தையில் எல்லோருக்கும் லாபம் கிடைக்கும் வகையில் விற்பனை செய் முடியும்.

இந்திய உணவு கழகம் தாமதம் செய்ததாலேயே 'காரியஸ் சார்ஜ்' மூலம் இந்த இழப்பு தமிழ்நாடு நுகர் பொருள் வாணியக் கழகத்திற்கு ஏற்பட்டுள்ளதென்றும் 28-12-79 நாளிட்ட கடிதத்தில் மைய அரசுக்கு மாநில அரசால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

இதற்கிடையில் மைய அரசு தமிழக அரசிற்கு வேலைக்கு உணவுத்திட்டத்தின் கீழ் அரிசி ஒதுக்கீடு செய்ய வேண்டி இருந்தது. இந்த திட்டத்திற்காக மைய அரசு நமக்கு அளிக்க வேண்டிய அரிசியை நாம் மத்திய தொகுப்பிற்காக ஒதுக்கி வைத்திருந்த 2 லட்சம் டன்னிலிருந்து எடுத்துக் கொள்ளலாமென்றுமைய அரசிடம் அனுமதிபெற்று அவர்கள் அதற்கான விலையையும்தந்தார்கள்.

அதன்படி 9 மாதகாலத்திற்கு பிறகு 73 ஆயிரம் டன் அரிசி வேலைக்குஉணவுதிட்டத்திற்கு எடுத்து பயன்படுத்தப்பட்டது.

உண்மை இவ்வாறிருக்க தமிழக அரசு மைய தொகுப்பிற்கு அரிசி தரவில்லை என்பது முற்றிலும் தவறானது.

மேலும் நாம் ஏற்கெனவே சொல்லியபடி நம்மிடம் அரிசி கையிருப்பு உபரியாக இருந்த போதெல்லாம் நாம் மத்திய தொகுப்பிற்கு வழங்கியுள்ளோம். ஆனால்மாநில தேவைக்க வேண்டிய அரிசி உற்பத்தி இல்லாத நிலையில் தான் நாம் மைய அரசிற்கு அரிசி கொடுக்க இயலாத நிலையில் இருந்து வருகிறோம் தவிர மத்திய தொகுப்பிற்கு அரிசி கொடுக்கக்கூடாது என்ற காரணத்தினால் இல்லை.

மாநிலத்தில் அரிசி உபரியாக இருந்தபோது மத்திய தொகுப்பிற்கு வழங்கிய நாம் பற்றாக்குறை ஏற்பட்ட போது மத்திய தொகுப்பிலிருந்து அரிசி கேட்க வேண்டிய நிலைக்கு ஆளானோம்.

அரிசி இருக்கிற நேரத்தில் நாம் கொடுக்கத் தயார் என்று கூறியும் அவர்கள் எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் நமக்கு இப்போது பற்றாக்குறை, நாம்வழங்கக்கூடிய நிலையில் இல்லை, கேட்கக் கூடிய நிலையில் இருக்கிறோம் என்று சொல்லுகிறோம்.

நாம் 17200 நியாய விலைக்கடைகள் மூலம் தமிழகம் முழுவதுமுள்ள 1. 17 கோடி குடும்ப கார்டுகளுக்கு ஒரு குடும்பத்திற்கு மாதமொன்றிற்கு 20 கிலோ அரிசி என்று விநியோகித்து வருகிறோம்.

1982 ஏப்ரல் மாதம் 36ஆயிரத்து77 டன் அரிசி குடும்ப கார்டுகள் மூலம் விநியோகிக்கப் பட்டது இந்த தேவைப் படிப்படியாக உயர்ந்து டிசம்பர் மாதம் 86,625 டன் என்ற அளவுக்கு வந்துள்ளது

எனவே இப்போது மாதம் 90 ஆயிரம் டன் அளவுக்குநமக்கு தேவைப் படுகிறது

1980ம் ஆண்டு முழுவதற்கும் நாம் மத்திய அரசிடம் கேட்ட அளவு ஒரு லட்சத்து 91 ஆயிரம் டன்கள் அவர்கள் அந்த அளவு ஒதுக்கீடு செய்தார்கள்.

ஆனால் அவர்களிடம் இருந்து நமக்கு உண்மையில் வந்து சேர்ந்தது 93,205 டனகள் தான்.

1981-ல் வறட்சி நிலை அதிகமானதால் 11 லட்சத்து 26 ஆயிரம் டன் அரிசி ஒதுக்கீடு செய்யுமாறு கேட்டோம். அவர்கள் 6 லட்சத்து 10 ஆயிரம் டன்தான் ஒதுக்கீடு செய்வதாக கூறினார்கள்,

ஆனால் வந்ததோ 4 லட்சத்து 8 ஆயிரம் டனகள்தான்.

1982 மே மாதம் வரை நாம் 5 லட்சம் டன்கள் கேட்டோம்.

ஆனால் அவர்கள்ஒதுக்கீடு செய்தது ஒரு லட்சத்து 95 ஆயிரம் டன்கள் தான்.

ஆனால் இதில் வந்து சேர்ந்ததோ ஒரு லட்சத்து 61 ஆயிரம் டன்கள் தான்.

ஆக நாம் கேட்டதோ 5 லட்சம் டன்கள், வந்து சேர்ந்தது ஒரு லட்சத்து 61 ஆயிரம் டன்கள்,

### பிரதமரிடம் கோரிக்கை

1982 மே மாதம் முதல் நாம் மாதம் ஒன்றுக்கு ஒரு லட்சம் டன அனுப்பும்படி கேட்டோம்.

பிறகு 80 ஆயிரம் டன்களாவது அனுப்பும்படி கேட்டோம்.

ஜூன் மாதத்தில் இருந்து இன்று வரையில் அதாவது கடும் வறட்சியும் பெரும்அரிசிப்பற்றாக் குறை ஏற்பட்டுள்ள இந்த நேரத்தில் மத்திய தொகுப்பில் இருந்து நமக்கு அரிசி எதுவும ஒதுக்கீடு செய்யப்படவில்லை.

அக்டோபர் மாதம் டெல்லி சென்றிருந்த போது நான் பிரதமரை சந்தித்து மத்திய தொகுப்பில் இருந்து அரிசி ஒதுக்குமாறு கோரி கடிதம் ஒன்றைக் கொடுத்தேன்

பிறகு 7-1-83 அன்று பிரதமருக்கு மற்றோர் கடிதம் அனுப்பினேன் இதுவரை அந்தக் கடிதத்திற்கு பதில் இல்லை,

### மைய மந்திரியிடம் வற்புறுத்தல்

நவம்பர் மாதம் டெல்லி சென்று இருந்தபோது நான் மையவேளாண்மை அமைச்சர் ராவ் பீரேந்திர சிங்கை நேரில் சந்தித்து நமது கோரிக்கையை வலியுறுத்தினேன்

இந்த சந்திப்பை நினைவூட்டி 7-1-83ல் அவருக்கு கடிதம் எழுதினேன்

8-11-82 அன்று நிதி அமைச்சர், மத்திய வேளாண்மை அமைச்சர் ராவ்பீரேந்திரசிங் அவர்களுக்கு மத்திய தொகுப்பிலிருந்து அரிசி ஒதுக்கீடு செய்யுமாறு கடிதம் எழுதினார். 14-10-82 மற்றும் 13-11-82 ஆகிய தேதிகளில் மைய அமைச்சர்களைச் சந்தித்து இந்தக் கோரிக்கையை வலியுறுத்தினார்.

13-11-82 அன்று முன்னாள் மத்திய விநியோக அமைச்சர் பகவத்ஜா ஆசாத் அவர்கள் நடத்திய கூட்டத்தில் கலந்து கொண்டபோதும் இந்தக் கோரிக்கையை வலியுறுத்தினார்.

உணவுத்துறை இணைச் செயலர் 1982 நவம்பர், டிசம்பர் மாதங்களிலும் மற்றும் 21-1-83 அன்றும், மத்திய அரசு அதிகாரிகளைச் சந்தித்து நிலைமைகளை விளக்கினார். அது மட்டுமல்லாமல், 8-9-82, 19-9-82, 14-10-82, 12-11-82 மற்றும் 22-12-82 ஆகிய தேதிகளில் மாநில உணவுத்துறை செயலர், மத்திய அரசு அதிகாரிகளை சந்தித்து இந்தக் கோரிக்கையை வலியுறுத்தினார்.

23—10—82அன்று முன்னாள் மத்திய வேளாண்மை இணை அமைச்சர் ஆர்வி சுவாமிநாதன் சென்னையில் உயர் அதிகாரிகள் மற்றும் வருவாய்த்துறை அமைச்சர் ஆகியோருடன் பேச்சுவார்த்தை நடத்தியபோதும் அரிசி நிலைமை குறித்து குறிப்பிட்டு கோரிக்கை வற்புறுத்தப்பட்டது

### அரிசி கேட்டால் அறிவுரை தருவதா?

10-1-83 அன்று மத்திய வேளாண்மை அமைச்சர் ராவ்பீரேந்திரசிங்கிடமிருந்துவந்த கடிதத்தில் தமிழ்நாட்டில் இருக்கின்ற அரிசியை நலிந்த பிரிவினருக்கு மட்டும் நியாயமாக பங்கீடு செய்வதன் மூலம் நிலைமையைச் சமாளிக்குமாறு தெரிவித்திருக்கிறார்கள்.

நாம் அரிசிகேட்டதற்கு அவர்கள் அறிவுரை தந்திருக்கிறார்கள். இங்கிருக்கின்ற நெருக்கடி நிலைமையை அவர்கள் அனுதாபத்துடன் அணுகியதாகத் தோன்றவில்லை! புரிந்துகொண்டதாகவும் தோன்றவில்லை.

சமாளிக்கலாம் என்று கருதினால் ஒரு ஆண்டுக்கு முன் 65 ஆயிரம் டன் கோதுமையை அரைவை ஆலைகளுக்கு கொடுத்து வந்ததைக் கூட 33 ஆயிரம் டன்களாக் குறைத்துவிட்டார்கள்.

நாம் அதற்குப் பிறகு குறைந்த அளவு 40 ஆயிரம் டன்களாவது ஒதுக்கீடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு வருகின்றோம. ஆனால் மத்திய அரசு 33 ஆயிரம் டன் என்ற அளவிலேயே அரவை ஆலைகளுக்கு ஒதுக்கீடு செய்கிறார்கள்.

பொது விநியோகத்திற்கு மாதம் ஒன்றுக்கு 11ஆயிரம்டன் கோதுமை ஒதுக்கீடு செய்ய வேண்டுமென்று தொடர்ந்து கேட்டு வந்தோம்.

ஆனால் மத்தியஅரசு 4 ஆயிரம் டன்கள் தான் கொடுத்து வருகிறார்கள். இந்த அளவைக்கொண்டு ஒரு குடும்பகார்டுக்கு ஒரு மாதத்துக்கு ஒரு கிலோ கோதுமைகூட கொடுக்க முடியாது

இப்பொழுதுள்ள உணவு நெருக்கடி நிலையைச் சமாளிக்க 80 ஆயிரம் டன் அரிசியும், 40 ஆயிரம்டன்கோதுமையும் வழங்குமாறு மத்திய அரசை மாநில அரசு தொடர்ந்து வற்புறுத்திக் கேட்டு வருகிறது

### பாரபட்ச போக்கு

தமிழ்நாடு நுகர்பொருள் வாணிபக கழகம் ஆந்திரா நுகர்பொருள் வாணிபக்கழகத்திடமோ, அல்லது வேறு மாநிலக் கழகங்களோடு தொடர்பு கொண்டோ அரிசிவாங்குவதற்கு மத்திய அரசு தடை விதித்திருக்கிறது. வெளிநாடுகளிலிருந்து அரிசியை நேரடையாகக் கொள்முதல் செய்வதற்கும், மாநில அரசுக்கு அதிகாரமும் வழியும் இல்லை

சீராகக் கிடைக்க வேண்டுமென்ற நோக்கோடு அரிசி உணவுப்

(4-ம் பக்கம் பார்க்க)

## முசிறிப்புத்தன் குமரி மாவட்ட சுற்றுப்பயணம்

சென்னை, பிப். 8— அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத்தலைவரும், இளைஞரணித் தலைவருமான முசிறிப்புத்தன் இம்மாதம் 17, 18, 19, தேதிகளில் குமரி மாவட்டத்தில் சுற்றுப்பயணம் செய்கிறார்.

இது குறித்து குமரி மாவட்ட எம்.ஜி.ஆர். மன்ற செயலாளர் தமிழ்மகன் உசேன் விடுத்துள்ள வேண்டுகோளில் குமரி மாவட்டம் வரும் முசிறிப்புத்தன் எம்.எல்.ஏவுக்கு சிறப்பான வரவேற்பு கொடுக்க அணிதிரண்டு வருமாறு மன்ற மறவர்களையும் கழகத்தோழர்களையும் கேட்டுகொண்டுள்ளார். இளைஞர் அணிகுறித்து ஆசாத் லாட்ஜில் நடைபெறும் ஆலோசனை கூட்டத்தில் தவறாது கலந்து கொள்ளுமாறும் கேட்டுக் கொண்டுள்ளார்.

★

## நிர்வாகிகள் தேர்வு

சென்னை, பிப். 8— சென்னை 134— வது வட்டம் மயிலைத் தொகுதியில் கபாலிவன போஜன தோட்டத்தில் உள்ள சத்தியா மைந்தன் சத்தியசீலன் எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகள் தேர்வு வட்ட செயலாளர் எம். கே. பாலன் தலைமையிலும், சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற துணைச் செயலாளர் மந்தவெளி நடராசன் முன்னிலையிலும் நடைபெற்றது. நிர்வாகிகள் விவரம் வருமாறு:—

மயிலை எம். ரங்கன் கௌரவ தலைவர், தலைவர், செ. சண்முகய்யா, செயலாளர் வி. எம், ராஜு, துணை செயலாளர் சி. சுப்பிரமணியம், பொருளாளர் அப்பாசாமி, மன்ற காப்பாளர் கே.செல்வராஜ் இதுதவிர 9 செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

★

சத்தியா மகளிர் மன்றம் சார்பாக

## அண்ணா நினைவு நாள் விழா

சென்னை, பிப். 8— சென்னை வியாசர்பாடி 33-வது வட்ட அன்னை சத்தியா மகளிர் மன்றம் சார்பாக அண்ணா நினைவு நாள் விழா கே.விஜயா தலைமையில் பி. அருள்மேரி, பத்மா முன்னிலையில் நடைபெற்றது. இவ்விழாவில் அஞ்சலை, அன்னக்கிளி, ஜெயலக்ஷ்மி, ராஜம்மாள், அலமேலு, பார்வதி மற்றும் பெருமாள், செல்வம், கே. பெருமாள், மைக்கேல் ஆகியோர் கலந்து கொண்டனர்.

★

## பகுகுணா கட்சி இரண்டாக உடைந்தது

புதுடெல்லி, பிப். 8— பகுகுணா தலைமையிலிருந்து வந்த ஜனநாயக சோஷலிஸ்டு கட்சி இரண்டாக உடைந்தது. அக்கட்சியின் முக்கியத் தலைவர்களான ராஜ் நாராயணன், பனார்சிதாஸ் ஆகிய இருவரும் அக்கட்சியைக் கலைத்து விட்டதாக அறிவித்தனர்.

ஆனால் அந்த அறிவிப்பு பொறுப்பற்றது என்றும் கட்சி தொடர்ந்து இயங்கி வரும் என்றும் பகுகுணா தெரிவித்தார். இந்த இரண்டு தலைவர்களும் இந்திரா காங்கிரசுக்கு மாற்றாக ஒருகட்சியை ஆரம்பிக்கவே இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டதாக தெரிவித்துள்ளனர். ஆனால அவர்கள் இருவரும் ஜனதாக் கட்சியில் சேர இருப்பதாக அரசியல் வட்டாரங்களில் பேசப்பட்டு வருகிறது.

வெளிநாட்டு இயந்திரங்கள் பெற

தமிழகத்துக்குத் தடை - பீகாருக்கு அனுமதி

# மின்பற்றாக் குறைக்கு மத்திய அரசே காரணம்: பண்ருட்டியார் விளக்கம்

**சென்னை, பிப். 8- தமிழகத்து மின்பற்றாக் குறைக்கு மத்திய அரசே என்று காரணம் என்று சட்டசபையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் ஆணித்தரமாகக் கூறினார்.**

மின்வாரிய நிதிநிலை அறிக்கை மீதான விவாதத்திற்குப் பதில் அளித்துப் பேசுகையில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறியதாவது:-

தூத்துக்குடி, எண்ணூர் ஆகிய இடங்களில் உள்ள அனல்மின் நிலையங்கள் சீரான முறையில் இயங்கிக் கொண்டு வருகின்றன. தூத்துக்குடியில் அண்மையில் ஏற்பட்ட தடங்கல் எதிர்பாராதது.

புதியதாக வாங்கிய கார்கூட திடீரென்று நின்றுவிடுகிறது. அது போன்ற தற்காலிக விபத்து ஒன்றுதான் அங்கு ஏற்பட்டது. தூத்துக்குடியில் ஒரு வாரம் ஆனாலும், இரண்டுவாரம் ஆனாலும் சரியான முறையில் சீர்படுத்த வேண்டும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் சொன்னார்.

### சீரமைப்பு செய்யப்பட்டன

அதன்படி அங்கே சீரமைப்புகள் செய்யப்பட்டன. நெய்வேலியில் முழு உற்பத்தி கிடைக்கிறது. நெய்வேலி பேசின் பிரிட்ஜ் ஆகிய இடங்களில் மின் நிலையங்களில் ரஷ்ய சாதனங்கள் பொருத்தப்பட்டு உள்ளன.

வெளி நாடுகளிலிருந்து வரும் மின்சாதனங்கள், இயந்திரங்கள் தான் உயர்ந்த நிலையில் தொழில் நுட்பரீதியில் இருக்கின்றன.

நாம் இன்னும் தொழில் நுட்ப ரீதியில் வளர்ச்சி அடையவில்லை. உயர்ந்த நிலைமை உருவாக்கவும், போதிய வளர்ச்சி பெறவும், இப்போது தான் நாம் முயன்று வருகிறோம்.

தூத்துக்குடி அனல்மின் நிலைய சாதனங்களை பாரத் ஹெவி எலக்ட்ரானிக்ஸ் நிறுவனம்தான் நிறுவியது. 210 மெகா வாட் உற்பத்தி நிலையங்கள் நாட்டில் மொத்தம் 18 உள்ளன. இதில் பருனி முதலாவதாகவும், நாசிக் 2-வதாகவும், விஜயவாடா 3-வதாகவும் தூத்துக்குடியில் 1-ம், இரண்டும் 4-வதாகவும், 5-வதாகவும் இருக்கின்றன.

சென்ற வாரம் 29-ந் தேதி நடைபெற்ற மின்சார அமைச்சர்கள் மாநாட்டில் பெல் நிறுவனத்தின் மூலம் நிறுவபபடும் உற்பத்தி நிலையங்கள் இடையே ஒரு சீரமைப்பு வேண்டும் என்று பேசப்பட்டது.

### இங்கு கடல் நீர் அங்கே?

தூத்துக்குடி நிலையம் ஆரம்பிக்கப்பட்ட போது பின்னால் தேவைப்படும் போது குறைகள் நிவர்த்திக்கப்பட்டு ஓரளவு மாற்றி அமைக்கும் நிலையில் தான் ஆரம்பிக்கப்பட்டது. தமிழகத்தில் அனல் மின்நிலையத்திற்கு கடல் நீர் பயன்படுத்தப்படுகிறது. ஆனால் விஜயவாடாவில நல்ல நீர் பயன்படுத்தப்படுகிறது. இவற்றை எல்லாம் மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் உண்மை தெரிந்து கொள்ள முடியாது.

வெளிநாடுகளிலிருந்து இயந்திரங்களை இறக்குமதி செய்ய அனுமதி வேண்டும் என்று சொன்னேன்.

அதைத் தொடர்ந்து நாம் கொஞ்சம், கொஞ்சமாக நாம் நிலைமையை மாற்றிக் கொள்ளலாம் என்றும் குறிப்பிட்டோம்.

இங்கேயே குறைந்த விலையில் சப்ளை செய்யும் நிலைமை இருக்கிறது. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி வேண்டாம என்று நமக்கு சொன்னார்கள்.

பீகார் அனல் மின் நிலையத்திற்கு சோவியத் நாட்டிலிருந்து 4 இயந்திரங்கள் வாங்க அனுமதி கொடுக்கப்பட்டது. பீகாருக்கு காட்டப்படும் நேசிய நீரோட்டம் இங்கே வந்து பாயக்கூடாதா என்று தான் நான் கேட்டுக் கொள்கிறேன். நாங்கள் நியாயத்திற்குக் கட்டுப்பட்டவர்கள்.

### மாற்று இயந்திரம

எங்கேயாவது ஒரு யூனிட் நின்று விடுமானால் அதற்கு பதிலாக உடனடியாக சீர்படுத்துவதற்கு ஒரு மாற்று இயந்திரம் தேவை என்று திட்டம் போட்டு டிசம்பரில் மத்திய அரசுக்கு அனுப்பியிருக்கிறோம். 250 மெகாவாட் மாற்று இயந்திரம் இருக்குமானால் நிலைமை சீரடைந்து இருக்க முடியும்.

நாம் சொன்னதைக் கேட்டு மத்திய அரசு நமக்கு ஒத்துழைப்பு தந்து இருக்குமானால் இந்த நிலை ஏற்பட்டு இருக்காது.

சென்ற ஆண்டு போல் இந்த ஆண்டும் மழை இருந்தால் இந்த நிலை ஏற்பட்டு இருக்காது. மின்வெட்டைப் பற்றி சொல்லும் போது இந்திரா காங்கிரஸ்காரர்கள் ஆத்திரப் படக்கூடாது. உண்மையைத் தான் நான் சொல்லுகிறேன்.

மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் ஒகேனக்கல் பாண்டியாறு புன்னம்புழா திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. இவை 61-66 ஆண்டுகளில் இருந்த நிலை அந்தக்காலத்தில் 40 சதவிதம் முதல் 80 சதவீதம் வரை மின்வெட்டு இருந்தது. நாம் முழுக்க நீர்மின் நிலையங்களை நம்பிக் கொண்டிருந்தோம்.

### மத்திய அரசு ஒத்துழைப்பு இல்லை

கல்பாக்கம் அனல் மின் நிலையத்தை நம்பியிருந்தோம். அந்த அனல் மின் நிலையம் இன்னும் ஒழுங்காக செயல் படவில்லை.

1966-லிருந்து 69 வரை முறையாக ஐந்தாண்டு திட்டம் போடப்படவில்லை. அப்போது கர்நாடகம், கேரளம் நமக்கு மின்சாரம் கொடுத்து உதவியது.

1969-லிருந்து 74 வரை ஏற்பட்ட சிக்கல்களில் தான் தொடர்ந்து கஷ்ட நிலைமை ஏற்பட்டது.

கல்பாக்கம் அனல் மின் நிலையத்திலிருந்து 73 — 74 ல் எதிர்பார்த்தோம். அது இன்னும் செயல்படவல்லை.

போதிய மின் திட்டத்திற்கு நிதி ஒதுக்கப்படவில்லை.

எண்ணூர் அனல்மின் நிலையம விரிவுபடுத்தப்படவில்லை. மத்திய அரசின் உதவியும் கிடைக்கவில்லை.

அப்போது கர்நாடகம் பற்றாக்குறையாக இருந்தது. ஆக காங்கிரஸ் ஆட்சியிலும் சரி, அதற்குப் பின்பு வந்த ஆட்சியிலும் சரி இப்போதைய ஆட்சியிலும் சரி தமிழகம் தொடர்ந்து புறக்கணிக்கப்பட்டு வருகிறது என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசினார்.

திருச்செந்தூர்,

தேர்தல்:

## 5 கட்சி உட்பட 24 பேர் போட்டி

தூத்துக்குடி, பிப். 8— திருச்செந்தூர் சட்டசபைத் தொகுதிக்கான வேட்பு மனு வாபஸ் நேற்றுடன் முடிந்தது. 43 பேர் வேட்பு மனு தாக்கல் செய்திருந்ததில 2 பேர் மனு நிராகரிக்கப்பட்டது. 41 பேர் மனு ஏற்கப்பட்டது. இதில் மனு வாபஸ் வாங்க கடைசி நாளான நேற்று 17 பேர் தங்கள் வேட்பு மனுக்களை வாபஸ் பெற்றனா் இறுதியாக 24 பேர் போட்டியிடுகிறார்கள்.

அரசியல்கட்சி சார்பில் 5 பேரும் மற்றும் 19 பேர் சுயேச்சையாகவும் போட்டியிடுகின்றனர்.

கட்சி சார்பில் போட்டியிடுவோர் விவரம் வருமாறு:-

அமிர்தராஜ் (கழகம்), நெல்லை நெடுமாறன் (தி.மு.க.) சந்திரசேகரன் (இந்திரா காங்கிரஸ்), நெல்லை ஜெபமணி (ஜனதா), முத்து (காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ்)

மேயர் பட்டுராஜன் தீவிரம்!

# மதுரைமாநகராட்சியில் குறைகேட்டு முறை வழங்கும் திட்டம் அமல்

**மதுரை பிப. 8- மதுரை மாநகராட்சியில் வார்டு தோறும்மக்களின் குறைகளைக்கேட்டு முறை வழங்கும் திட்டத்தை மேயர் பட்டுராஜன தீவிரமாக அமலாக்கிவருகிறார்.**

மதுரை மாநகராட்சியில் ஒவ்வொரு வார்டு வாரியாகவும் மக்களைச் சந்தித்து அவர்களின் குறைகளைக் கேட்டு உடனுக்குடன் முறை வழங்கும் திட்டம் அமலாக்கப்பட்டுள்ளது. மேயர் எம். பட்டுராஜன், துணை மேயர் முனியசாமி, அதிகாரிகள், மாமன்ற உறுப்பினர்களுடன் சென்று மக்களைச் சந்தித்து வருகிறார்.

இந்த திட்டத்தை உள்ளாட்சித்துறை அமைச்சர் குழந்தைவேலு தொடங்கி வைத்தார். ஒவ்வொரு வார்டிலும் குறிப்பிட்ட நாளன்று ஒரு இடத்தில் அலுவலகம் நடத்தி மக்களிடம் மனுக்களைப் பெறுக் கொண்டு குறைகளை நிவர்த்திக்க எவ்வளவு காலம் பிடிக்கும் என்று மேயரும், அதிகாரிகளும் மக்களுக்கு உறுதி கூறுகின்றனா். சிறிய குறைகளாக இருபபின் அங்கேயே அதற்கு தீர்வு காணப்படுகிறது.

காலை 11 மணிக்கு மேல் வார்டில் பார்க்க வேண்டிய இடங்களைப் பார்வையிடுகின்றனர். ஒருவார காலத்திற்குள் வேலை நடந்த விவரம் பரிசிலனை செய்யப்படுகிறது.

### முதல் கட்டம்

மாமன்ற உறுப்பினர்கள் மறைவால் பிரதிநிதித்துவம் இல்லாத வார்டுகளில் மக்களின் குறைகளைத்தீர்ப்பது முதல்கட்ட நடவடிக்கையாக மேற்கொள்ளப்பட்டது. அதன்படி 25 வது வார்டு, 48 வது வார்டு, 57 வது வார்டு, 63 வது வார்டு, மக்களின் குறைகளை மேயர் பட்டுராசன் கேட்டு உடனடி நடவடிக்கை மேற்கொண்டார்.

மதுரை மாநகராட்சியில் உள்ள 65 வார்டுகளிலும் குறைகேட்டு முறைவழங்கும் திட்டம் தொடர்ந்து நடைபெற்று வருகிறது. மக்களைத் தேடி வந்து குறை அகற்றும் இந்த திட்டத்திற்கு மக்கள் மத்தியில் நல்ல வரவேற்பும், மாநகராட்சி மேயர் நடவடிக்கை குறித்து பாராட்டும் கிடைத்திருக்கிறது.

## தி. மு. க. மார்க்சிஸ்ட் தொழிலாளர் கழகத்தில் இணைந்தனர்

மதுரை, பிப். 8— பாண்டியன் போக்குவரத்துக் கழகம் போடி பணிமனையிலுள்ள தி. மு. க., சி. ஐ. டி. யூ. தொழிற் சங்கங்களைச் சேர்ந்த தேவராஜ், முருகேசன், ராமமூர்த்தி, கருப்பையா, விஜயன் உட்பட 50 தொழிலாளர்கள் அந்தச் சங்கங்களிலிருந்து விலகி பாண்டியன் போக்குவரத்துக்கழக அண்ணா தொழிலாளர் சங்க சிறப்புத் தலைவர் வெ. பாலகுரு, கழக எம். பி. எஸ். டி. கே. ஜக்கையன், ஆகியோர் முன்னிலையில் கழகத்தில் இணைந்தனர்.

அப்போது பி. ஆர். சி. அண்ணா தொழிலாளர் சங்கத்தலைவர் (மதுரை) ராமமூர்த்தி மற்றும் பொதுச் செயலாளர் பாலகிருஷ்ணன் ஆகியோர் உடனிருந்தனர்.

கழகத்தில் இணைவதைத் தடுக்க

# தி. மு. க. பிரமுகர்களுக்கு பொன் விலங்கு மாட்டும் கருணாநிதி

## அமைச்சர் காளிமுத்து பேச்சு

**சென்னை, பிப். 8- கழகத்தில் வந்து சேர்ந்து விடக் கூடாதே என்று தி. மு. க. பிரமுகர்களுக்குக் கருணாநிதி பொன்விலங்குகளை மாட்டுகிறார் என்று அமைச்சர் காளிமுத்து கூறினார்.**

சென்னை 128-வது வட்டத்திலுள்ள நாகேஸ்வர புரத்தில் நடந்த பிரும்மாண்டமான கழகப் பொதுக் கூட்டத்தில் பேசுகையில் அமைச்சர் காளிமுத்து கூறியதாவது:—

கொள்கை மறவர் கூட்டமான இந்த இயக்கம் புரட்சித்தலைவர் தலைமையில் லட்சிய உணர்வோடு இன்றைய தினம் வளர்ந்து வருகிறது.

ஒரு காலத்தில் - நாம் இந்த இயக்கத்தை துவக்கிய நேரத்தில்- இதை அரசியல் இயக்கமாக அங்கீகரிக்க நமது எதிரிகளுக்கு மனம் வரவில்லை.

இந்தக் கட்சி நீண்ட நாட்கள் இருக்காது. தலைமைக்கு தைரியம் இல்லை 6மாத காலத்தில் இதைக்கலைத்துவிடுவார்கள் காங்கிரஸ் கட்சியில் கரைந்து விடுவார்கள் என்றெல்லாம் ஆருடம் பேசினார்கள்.

தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணாவிற்குப் பிறகு திராவிட இன உணர்வுகளைக் கட்டிக் காக்கும் ஒரே தலைவராக முதல்வர் புரட்சித் தலைவர் உள்ளார்.

எதிரிகள் கூட இதை ஏற்றுக்கொள்ளும் சூழ்நிலையைக் காண்கிறோம்.

### திராவிட இயக்கம்

திராவிட இயக்கத்தின் பாரம்பரிய தொடர்ச்சிதான் அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் என்பதை தன்னடக்கத்தோடு கூறிக் கொள்கிறேன். அதற்கு முழுமையான வடிவம் தந்து புரட்சித்தலைவர் கொண்டு செல்வதை அருள் கூர்ந்து மறந்து விடாதீர்கள்.

தமிழ்நாட்டில் யாராலும் அசைக்க முடியாமல் இருந்த காங்கிரஸ் கட்சி ஆட்சியை அண்ணா முடிவுக்குக் கொண்டு வந்தார். அன்று காங்கிரஸ் கட்சி ஆட்சியின் கடைசி அத்தியாயத்தை அவர் எழுதி முடித்தார்.

அந்த 67-ம் ஆண்டு மறுமலர்ச்சி தான் இன்றைய தினம் ஆந்திர மாநிலத்திலே எதிரொலிக்கிறது. அதே எழுச்சியைத் தான் கர்நாடகத்திலேயும் நாம் காண முடிகிறது.

அண்ணாவுக்கு பின்னால் திராவிட இயக்கம் சிதைந்து விடக்கூடாது! உருக்குலைந்து விடக் கூடாது என்று நினைத்த புரட்சித் தலைவர் கருணாநிதியை திராவிட இயக்கத்தின் தலைவராகவும் தமிழகத்தின முதல்வராகவும் அமர வைத்தார்.

### நன்றி மறந்த கருணாநிதி

கருணாநிதி அந்த பெருந்தன்மையை உணர்ந்து தன்னை அதற்குத் தகுதி உள்ளவராக ஆக்கிக்கொண்டாரா என்றால் இல்லை.

யார் தன்னை முதல்வர் ஆக்கினாரோ அவரிடம் நன்றி உணர்ச்சி காட்டாமல் அவரை அந்த இயக்கத்திலிருந்து துரத்தினார்.

அப்படி துரத்திய பிறகு தி.மு.க.வை கருணாநிதியால் நிலைநிறுத்த முடிந்ததா என்றால் இல்லை.

இன்றைய தினம் அங்கே என்ன நிலைமை? நித்தம் நித்தம் அங்கேயிருந்து தோழர்கள் இங்கே வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்களாக வருகிறார்கள். நாங்கள் யாரையும் வலை போட்டுப் பிடிக்கவில்லை.

நீங்கள் (கருணாநிதி) செய்த கொடுமைகளை எல்லாம் தாங்காமல் இங்கே வருகிறார்கள். வருபவர்கள் என்ன, பச்சைக் குழந்தைகளா!

தி.மு.க. என்று அங்கே லேபிள் இருந்தாலும் அந்த கட்சி கருணாநிதியின் மகன்கள், மருமகன்கள் நடத்தும் கம்பெனி என்று புரிந்து கொண்டார்கள்: அதனால்தான் அங்கே இருந்து இங்கே வருகிறார்கள்.

அங்கே எஞ்சியிருப்பவர்களை போக விடாமல் தடுத்திடும் முயற்சியில் கருணாநிதி ஈடுபட்டு உள்ளார்.

### மணி விழா மர்மம்

யார் யாருக்கு 60வயது ஆகிறதோ அவர்கள் அனைவருக்கும் மணி விழா கொண்டாடுகிறார்.

பேராசிரியர் அன்பழகன், நீலநாராயணனுக்கு மணி விழா என்கிறார்.

நீலநாராயணன் "எனக்கு போன ஆண்டே 60 வயது முடிந்துவிட்டதே! மணி விழா ஏன் என்று கேட்டதற்கு முடிந்து இருந்தால் பரவாயில்லை, நடத்துகிறேன்" என்கிறார் கருணாநிதி.

இந்த விழாக்கள் கருணாநிதி மனப்பூர்வமாக நடத்தும் விழாவா! இல்லை.

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகத்திற்கு அவர்கள் எல்லாம் போய் விடக் கூடாது என்பதற்காக அவர்களுக்கு போடப்படும் பொன் விலங்கு அது.

அந்தக் கட்சியை இப்படி எத்தனை நாளைக்கு அவர் பாதுகாக்கப் போகிறார்!

அங்கே இருந்து வருபவர்களை கேவலமாகப் பேசுகிறார்.

தி மு கவுக்காக பாடுபட்ட ஆர்.டி. சீதாபதி அங்கே துருப்புச்சீட்டாக இருந்தவர் அல்லவா? அவர்கள் எல்லாம் இங்கே வந்தால் குதிரைசாணம், எருக்கம்பூ என்கிறார்.

### வெள்ளிக் கட்டி வெல்லக் கட்டி

வெள்ளிக்கட்டிகள் கொடுத்தபோது வெல்லக் கட்டியாக இருந்தவர் இங்கே வந்தால் மண்ணாங்கட்டியா?

தான் செய்யும் தவறுகளைச் சமாளிக்க விளக்கம் சொல்கிறார். அங்கே இருந்து விலகுகிறவர்களை தாறுமாறாகப் பேசுகிறார்.

அண்ணா பெயரைச் சொல்லியா ஓட்டு கேட்டார்? அல்லது அவரது பெயரைச் சொல்லியா ஓட்டுகேட்டார்? இல்லை.

இறந்துபோன கம்பம் நடராஜன் பெயரைச் சொல்லி ஓட்டுகள் கேட்டார்.

இப்போது திருச்செந்தூரிலும் இறந்துபோன சுப்பிரமணியபிள்ளை பெயரைச் சொல்லி ஓட்டுக் கேட்கிறார்.

பிரச்சினைகள் பற்றிப் பேசி கருணாநிதி அரசியல் நடத்துகிறாரா என்றால் இல்லை.

செத்துப்போனவர்களைப்பற்றி பேசுகிறார். அதனால் தான் பெரியகுளத்தில் மக்கள் அவருக்குப்பாடம்கற்பித்தனர்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து பேசினார்.

### கழகக் கொடி ஏற்றினார்

சாயிபாபா கோவில் அருகேயுள்ள பூந்தோட்டம் பகுதியில் அமைச்சர் காளிமுத்து கழகக் கொடியை ஏற்றினார்.

### கூட்ட விவரம்

கூட்டத்திற்கு வட்டச் செயலாளர் து. பக்கிரி தலைமை வகித்தார்.

சென்னை மாவட்ட புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் இ. மதுசூதனன், மயிலைத் தொகுதி செயலாளர் மயிலை வே. தமிழ்மணி, கோ. பா. அமிர்தம், வெ. மாயன், வி. மாணிக்கம், மயிலை ராமசாமி, பக்கிரிசாமி, பெ. சீனிவாசன், ப. முனுசாமி, பி. எஸ். வேணு ஆகியோரும் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசினர்.

முன்னதாக காஞ்சி அண்ணாதாசனின் கலை நிகழ்ச்சி நடந்தது.

அமைச்சர்கள்

## குழந்தைவேலு, அண்டே பங்கேற்கும் கழகப் பொதுக்கூட்டம்

சென்னை, பிப். 8— சென்னை மாநகராட்சி தேர்தல் நிதியளிப்பு விழா கழகப் பொதுக் கூட்டம் இன்று (8-ந்தேதி) மாலை அரும்பாக்கம் பெருமாள் கோவில் தெருவில் ஆ. செல்வராஜ் தலைமையில் முகமது அலி, இரா. வேதா வி. கே. சுகுமாரன் ஆகியோர் முன்னிலையில் நடைபெறுகிறது.

இக்கூட்டத்தில் அமைச்சர்கள் குழந்தைவேலு, டாக்டர் அண்டே ஆகியோர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகின்றனர். லியாகத் அலிகான், மதுசூதனன், பா. வளர்மதி, ஏ. எம். பாலு, தரங்கை கண்ணன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, ஜி. கே. சாமி ஜெயராமன், கோதண்டராமன், மாறன், மோகன், துவாரகநாதன், மற்றும் சுந்தரராஜன், அர்ஜுனன் கருணாகரன் ஆகியோர் கலந்து கொண்டு பேசுகின்றனர்.

டி. எம். ஜானி, நித்தியா குழுவினரின் கலை நிகழ்ச்சியும் நடக்கிறது.

சத்துணவுக்கூட

# கணக்குகளை ஒப்படைக்காத ஆசிரியர்கள்

## புரட்சித்தலைவர் தகவல்

சென்னை, பிப். 8 சில இடங்களில் சத்துணவுக்கூட கணக்குகளை ஆசிரியர்கள் இன்னும் ஒப்படைக்கவில்லை என்ற தகவலை முதலவர் புரட்சித்தலைவர் வெளியிட்டார்.

சட்ட மேலவையில் கவர்னர் உரைக்கு நன்றி தெரிவிக்கும் தீர்மானத்தின் மீது கழகக் கொறடா டாக்டர் ஜனார்த்தனம் பேசுகையில், சத்துணவுத் திட்டம் ஒரு சீரான திட்டம். நாட்டு மக்களே இதைப் போற்றுகிறார்கள். பாரதி நூற்றாண்டு விழாவை யொட்டி பாரதி சிலையை பெற்றுக் கொள்ள அஸ்ஸாம் மாநிலத்திலிருந்து வந்தவர்கள் அங்கே அரசாங்க திட்டங்கள் வானொலி மூலம் பிரச்சாரம் செய்யப்படுவதாக கூறினார்கள். அதைப்போன்று நமது மாநிலத்திலும் முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு திட்டம் பற்றி வானொலியில் எடுத்துச் சொல்லலாம். சத்துணவு திட்டத்தின் மூலம் சுமார் 65 லட்சம் குழந்தைகள் சாப்பிடும் அழகை திரைப்படம் எடுத்தும் வெளியிடலாம் இந்தத் திரைப் படங்களைப் பார்க்கும் பொதுமக்கள் சத்துணவுத் திட்டத்தை எதிர்க்கும் உறுப்பினர் கே.முத்துசாமி, மீனாட்சி சுந்தரம் ஆகியவர்களின் தவறான போக்கையும் புரிந்து கொள்வார்கள் என்று கூறினார்

அப்போது முத்துசாமி ஆசிரியர் கூட்டணி) குறுக்கிட்டு நாங்கள் சத்துணவுத் திட்டத்தை எப்போதும் எதிர்க்கவே இல்லை அந்த நல்ல திட்டத்தை நாங்கள் பெரிதும் பாராட்டுகிறோம் ஆனால் அதற்கான பொறுப்புகளில் இருந்து ஆசிரியர்கள் நீக்கப்பட வேண்டும் என்றுதான் சொல்லுகிறோம்.

ஆசிரியர்களின் கோரிக்கைகளை ஏற்று முதல்வர் ஒரு முடிவை எடுத்திருக்கிறார்

இந்தக் கட்டத்தில் உறுப்பினர் ஜனார்த்தனம் இப்படி சொல்லலாமா?

புரட்சித்தலைவர்:- உங்களுடைய நல்ல எண்ணத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

### பொறுப்புகளை தராதவர்கள்

சில இடங்களில் ஆசிரியர்கள் தங்களது பொறுப்புக்களை இன்னும் ஒப்படைக்கவில்லை.

மீனாட்சி சுந்தரம்:- எங்கள் சங்கத்தைச் சேர்ந்த ஆசிரியர்கள் பொறுப்புகளை ஒப்படைத்து விட்டார்கள்

புரட்சித்தலைவர்: சில இடங்களில் ஆசிரியர்கள் தங்களது கணக்குகளை ஒப்படைக்காமல் இருக்கிறார்கள் என்று தான் கூறினேன் உறுப்பினர் மீனாட்சிசுந்தரம் எங்கள் சங்கம் என்று சொல்லுகிறார். ஒட்டு மொத்தமாகப் பார்க்க வேண்டும் எங்கெங்கு கணக்கு ஒப்படைக்கப் படவில்லை என்பது பற்றியெல்லாம் நான் நாளை என் பதிலில் தெரிவிக்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.



மீன் பிடிப்பதை முறைப்படுத்த

# சட்ட திருத்த மசோதா தாக்கல்

சென்னை, பிப். 8— தமிழ்நாடு, 1983 ஆம் ஆண்டு, கடலில் மீன் பிடிப்பதை முறைப் படுத்துதல் சட்ட சீர்திருத்த முன்வடிவை நிதியமைச்சர் டாக்டர் நாவலர் சட்டசபையில் தாக்கல் செய்தார்.

மீன் பிடி படகுகளைக் கொண்டு மீன் பிடிப்பவர்களுக்கும். பரம்பரை மீனவர்களுக்குமிடையே தகராறு ஏற்படுவதைத் தவிர்க்க இந்திய அரசு அனுப்பி வைத்த மாநில சட்ட முன் வடிவின் அடிப்படையில் இச்சட்ட முன் வடிவு தாக்கல் செய்யப்படுகிறது.

ஏற்கனவே இதுகுறித்து வெளியிடப்பட்ட அவசர சட்டத்துக்கு பதிலாக இச் சட்ட முன் வடிவு தாக்கல் செய்யப்படுகிறது.

# சென்னை நகரில் தொங்கு பாலங்கள்: முதல்வர் யோசனை

சென்னை, பிப். 8- பொதுமக்கள் செல்ல சென்னை நகரில் தொங்கு பாலங்கள் கட்டும் யோசனையைத் தாம் தெரிவித்திருப்பதாக முதலவர் புரட்சித்தலைவர் கூறினார்.

சட்ட மேலவையில் ஒரு கேள்விக்கு பதில் அளித்து அமைச்சர் குழந்தைவேலு கூறியதாவது:-

தேசிய நெடுஞ்சாலையில் தாம்பரம் அருகிலிருந்து சுமார் 32 கிலோ மீட்டர் தூரத்திற்கு சென்னை நகருக்கு ஒரு புறவழிச்சாலை அமைக்கும் திட்டம் செயல்படுத்தப்பட இருக்கிறது.

இதன் தோராய மதிப்பீடு 1980-81-ம் ஆண்டு நிலைப்படி ரூபாய் 10 கோடியாகும்.

அதற்கான நிலத்தை ஆர்ஜிதம் செய்வதற்காக மத்திய அரசு ரூ. 1 கோடியே 37 லட்சத்து 16 ஆயிரம் கொடுத்து இருக்கிறது.

### அனைத்து நகர்களிலும் பைபாஸ் ரோடு

புறவழிச் சாலைகள் (பைபாஸ் ரோடு) எல்லா நகரங்களிலும் அமைக்கும் திட்டம் ஆய்வில் உள்ளது.

நிதிநிலை ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டு இந்தப் புறவழிச் சாலைத் திட்டம் மேற்கொள்ளப்படும்

வெங்கடேசன்: சென்னைகோடம்பாக்கம் டிரஸ்ட்புரத்தில் சுரங்கப் பாதை அமைக்க வேண்டும். பொதுமக்கள் அந்த இடத்தில் ரோடைக் கடக்க இடைஞ்சலாக இருக்கிறது. இரவு நேரங்களில் ஏற்கனவே ஏற்பட்டுள்ள சுரங்கப்பாதைகள் மூலம் செல்ல பெண்கள் பயப்படுகிறார்கள். அங்கே பாதுகாப்பு தேவை.

முதல்வர் புரட்சித் தலைவர்:- இந்தப் பகுதிகளில் நான் 21 ஆண்டுகளுக்கு மேலாக இருந்து இருக்கிறேன். அங்கே சுரங்கப்பாதை அமைய வாய்ப்பில்லை. சுரங்கப்பாதை அமைப்பதற்கு பல்வேறு சூழ்நிலைகளைப் பார்த்துத்தான் அமைக்கப்படுகிறது.

பூக்கடைப் பகுதியில்கூட ஜனநெரிசல் அதிகமாக இருக்கிறது. அங்கே ஒரு வழிப்பாதையாகவும் ஆக்க முடியாது.

தாமஸ்:— சுரங்கப் பாதைகளில் பொது மக்கள் நடந்து செல்லும் போது பாதுகாப்பு ஏற்பாடுகளும் இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

முதல்வர் புரட்சித் தலைவர்:— பாதுகாப்பு ஏற்பாடுகளுக்கு ஏற்ற பல்வேறு வகைகளில் அரசு நடவடிக்கைகளை மேற்கொள்ளும். யார் அதிகாரிகள், யார் பொதுமக்கள் எனத் தெரியாத நிலையில் பொதுமக்களுக்கு பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்று கூறிக்கொள்கிறேன்.

சங்கரலிங்கம்:- பொது மக்கள் செல்ல தொங்கு பாலங்கள் அமைக்கும் திட்டம் உண்டா? அமைக்கலாமே?

முதல்வர் புரட்சித் தலைவர்:— தொங்கு பாலங்கள் ரஷ்யா போன்ற நாடுகளில் உள்ளன. சென்னையில் அப்படிப்பட்ட பாலங்கள் கட்டலாம் என்ற யோசனையை நான் சொல்லி இருக்கிறேன்.

அப்படிப்பட்ட தொங்கு பாலங்கள் கட்ட ஏராளமாக செலவு பிடிக்கும் இப்படி அதிக செலவு ஏற்படுவதால் இதையும் கவனிக்க வேண்டி இருக்கிறது.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

மற்றொரு கேள்விக்குப் பதில் அளித்த அமைச்சர் குழந்தைவேலு கூறியதாவது:-

கடந்த 3 ஆண்டுகளில் சென்னையில் 6 சுரங்கப் பாதைகள் போக்குவரத்துக்கு இடைஞ்சல் இல்லாமல் மக்கள் வசதிக்காக கட்டப்பட்டுள்ளன

சுரங்கப் பாதைகளைக் கட்டி விட்டாலும் சாலையில் செல்பவர்களில் சுமார் 30 சதவிகிதத்தினரே சுரங்கப்பாதையை உபயோகப்படுத்துகின்றனர். மற்ற 70 சதவிகிதத்தினர் சாலையின் குறுக்கே தான் செல்ல முற்படுகிறார்கள்.

இவ்வாறு அமைச்சர் குழந்தைவேலு கூறினார்.



டி. எம். ஜானி கலைக்குழு நிகழ்ச்சிகள்

பிப் 8, அரும்பாக்கம்
12, 13, தர்மபுரி
23, 24 பெங்களூர்

# புரட்சித்தலைவர் உண்ணாவிரதம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பங்கீட்டு முறையில் நாடு முழுவதும் ஓரே மண்டலம் என்னும் கொள்கையைக் கடைப்பிடிக்கும் மைய அரசு கடுமையான பற்றாக்குறையைச் சந்திக்கும் தமிழகத்துக்கு மட்டும் அரிசி வாங்கும் அனுமதியை மறுப்பது எந்தக் கொள்கையின் அடிப்படையில்?

### மைய அரசே பொறுப்பு

தற்போது ஏற்பட்டிருக்கும் இக்கட்டான உணவுக் தட்டுப்பாட்டு நிலையைச் சமாளிக்க இந்த மாநில அரசு இயன்றவரையில் எல்லா விதநடவடிக்கைகளையும் முறையாகவும், நியாயமாகவும் உறுதியாகவும் செய்து கொண்டு வருகிறது. தமிழ்நாட்டின் உணவு நிலைமை மிக நெருக்கடிக்கு உள்ளாகி இருப்பதற்கு முழுப் பொறுப்பும் பொதுவாக மத்திய அரசும் குறிப்பாக மத்திய வேளாண்மைத் துறை அமைச்சர் மாண்புமிகு திரு ராவ்பிரேந்திரசிங் அவர்களும் தாம் ஏற்க வேண்டியவர்களாகிறார்கள் மத்தியவேளாண்மை அமைச்சர் இந்தப் பிரச்சினையில் அக்கறையோ அனுதாபமோ, அனுசரணையோ காட்டாமல் இப்பொழுது இருந்து வருவது வேதனை தருவதாக இருக்கிறது. அவரது 10-1-83கடிதத்தின் மூலம் அரிசு அனுப்புவதற்குப் பதிலாக அறிவுரை மட்டுமே தந்திருப்பது வருந்துவதற்குரியதாக இருக்கிறது

இந்த அரசு தமிழக மக்களின் பரிதாப நிலைமையை நீக்க எல்லா நடவடிக்கைகளையும் எடுத்திருக்கிறது.

அரிசிப் பிரச்னையில் இவ்வளவு உண்மைகள் இருக்க அவைகள் மறைக்கப்பட்டுள்ளன.

மத்திய தொகுப்புக்கு அரிசி கொடுக்கவில்லை! ஆகவே தமிழகத்துக்கு அரிசி கொடுக்க முடியாது என்று சொல்வது என்ன நியாயம்?

இந்த உண்மையை தமிழக மக்கள் மட்டும் அல்ல, நாடு பூராவும் உள்ளவர்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

இதை வலியுறுத்தி நான் நாளை காலை 10 மணி முதல் மாலை 5 மணி வரை உண்ணாவிரதம் இருக்கப் போகிறேன்.

இன்னொன்றையும் நான்சொல்லித்தான் ஆக வேண்டும் தமிழகம் கண்ணீர் விடும் நிலையில் இருக்க நீங்கள் மத்திய தொகுப்புக்கு அரிசி கொடுக்கவில்லை ஆகவே நாங்கள் உங்களுக்கு அரிசி கொடுப்பதற்கில்லை என்று சொன்னால் நாட்டில் ஒருமைப்பாடு எப்படி வரும்

சங்கரலிங்கம்! மத்திய அரசின் போக்கை கண்டித்து உண்மைகளை சொல்லி யிருக்கிறீர்கள், உங்கள் உணர்வுடன் எங்களது கட்சியின் உணர்வுகளையும் இணைத்துக் கொள்ளுகிறோம். உங்களுடன் சேர்ந்துபோராட நாங்கள் தயாராக இருக்கிறோம். ஆனால் அதற்காக முதல் அமைச்சர் உண்ணாவிரதத்தை மேற்கொள்ள வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்

சட்டசபையும், மேலவையும் தற்போது நடந்து கொண்டு இருக்கின்றன

மத்திய அரசின் போக்கைக் கண்டிக்கும் வகையில் நமது எதிர்ப்பைத் தெரிவித்து ஒரு கண்டனத் தீர்மானத்தை ஆளும் கட்சியும், எதிர்க் கட்சிகளும் ஏகமானதாக சட்டசபையிலும் மேலவையிலும் நிறைவேற்றி மத்திய அரசுக்கு அனுப்புவோம்.

ஆகவே முதல் அமைச்சர் உண்ணா விரதத்தை தவிர்க்க வேண்டும்என்று கேட்டுக் கொள்கிறேன்.

முதலவர் புரட்சித் தலைவர்:- நான் நாளை காலை 10 மணி முதல் அண்ணா சதுக்கத்தில் தான் உண்ணாவிரதம் இருக்கப் போகிறேன்



சட்டசபை காரியங்களையும் மேலவைக் காரியங்களையும் கவனித்துக் கொள்ள என்னுடைய கட்சியினர் இருக்கிறார்கள் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். மற்ற அமைச்சர்களோ அல்லது என்கட்சியைசேர்ந்தவர்கள்யாரும்என்னுடன் உண்ணாவிரதம் இருக்க நான் அனுமதிக்கப் போவதில்லை

என்னைப் பொறுத்தவரை தமிழகத்தின் நிலைமை பாதுகாப்பு அமைச்சருக்கே தெரிவிக்கப்படவில்லை ஒரு சக அமைச்சருக்கு தமிழகத்தின் பற்றாக்குறை நிலை தெரிவிக்கப்படவில்லை நான் யாரையும் என்னுடன் உண்ணாவிரதம் இருக்க அனுமதிக்கப் போவதில்லைஎன்னை நான் வருத்திக் கொள்ளப்போகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.



Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road Madras-600 029
Editor: E. PARASURAMAN